Phone: No. 2241

Regd. No. M. 5934

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர்.ப.ஜீவானந்தம்

மலர் 14] பக்கம் 4 :: விலை 1 அணா [இதழ் 229

சென்னை 6-4-58 ஹேவிளம்பி, பங்குனி-24 ஞாயிறு (வெளியூர் 7-4-58 ஹேவிளம்பி, பங்குனி-25 திங்கள்)

### ஐக்கிய அராபிய குடியரசின் புதிய கொடி

கெய்ரோ, ஏப். 4—

ஐக்கிய அராபிய குடியரசின் புதிய கொடியை இன்று ஜனாதிபதி நாசர் பிரகடனப்படுத்தினார். இந்தக் கொடி கருப்பு, வெள்ளை, சிகப்பு நிறத்தில், மத்தியில் இரண்டு பச்சை நட்சத்திரங்கள் பொறித்ததாக இருக்கும்.

### வெகு சீக்கிரம் மூன்றுவது ஸ்புட்னிக்

மாஸ்கோ, ஏப். 4—

சோவியத் யூனியனின் மூன்றுவது 'ஸ்புட்னிக்' வெகு சீக்கிரம் வான வெளியில் பறக்கவிடப்படும் என்று ரஷ்ய விஞ்ஞானக் கழக உபதலைவர் இவான் பார்டின் இன்று கூறினார்.

# கிரகாம் யோசனைகளை ஏற்கோம்

## சென்னையில் கேரள தினம்

### கேரள ராஜ்ய சர்க்காருக்கு தமிழக மக்களின் ஆதரவுண்டு

சென்னை, ஏப். 6—

நேற்று சென்னை நகரில் கேரள தினம் மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை ஜில்லாக் கமிட்டி, தொழிற்சங்கங்கள், வாலிபர் மன்றங்கள் தெருக்களில் கேரளம் வாழ்க! என்ற கோஷம் பொறித்த தோரணங்கள் கட்டியிருந்தனர். தெருவளைவுகளும் கொடிகளும் பல போடப்பட்டிருந்தன.

கம்யூனிஸ்ட் கட்சியின் பதினாலாவது வட்டக் கிளை சார்பில் குழந்தைகளுக்குத் தின்பண்டம் வழங்கப்பட்டது.

மாலை ராபின்சன் பார்க்கில் ஏ. எஸ். கே. அய்யங்கார் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

"விடுதலைப் போராட்ட காலத்தில் சுதந்திர ஆர்வம் கொண்ட ஏகாதிபத்திய எதிர்ப்பு சக்திகள் அனைத்தும் ஒன்றிணைந்து போராடின. இன்று சுதந்திரம் பெற்ற இந்தியாவில் தேசியப் புனர்நிர்மாணத்திற்காக, மக்களுக்கு நல்வாழ்வளிக்க, சோஷலிஸ எண்ணமுள்ள சோஷலிஸ அமைப்புக்கு வழி கோலுவதில் கண்ணும் கருத்துமுள்ள சகல சக்திகளும் ஒன்று சேர்ந்து பணியாற்ற வேண்டும். இந்தப் பாதையில் கேரளம் வழி காட்டியிருக்கிறது" என்று கூட்டத்தில் பேசிய கே. முருகேசன், கே. இராமநாதன், முகவை இராஜமாணிக்கம், வி. கே. கோதண்டராமன் எம்.எல்.ஏ. முதலியோர் கூறினார்கள்.

கேரள சர்க்கார் ஓராண்டு சாதனை இதர ராஜ்யங்களின் பத்தாண்டு சாதனைகளை மிஞ்சி விட்டன என்றும் நிர்வாக ஊழல் அதிகார வர்க்கப் போக்கு இவற்றை எதிர்த்து கேரள சர்க்கார் எடுத்துவரும் நடவடிக்கைகள் ஆதர்சமாயிருப்பதாகவும் குறிப்பிடப்பட்டது.

தேசியக் காங்கிரஸ் தனது லட்சியம்' என்று பிரகடனம் செய்த நிலச்சீர்திருத்தம், தொழிலாளருக்கு குறைந்தபட்சக் கூலி நிர்ணயம் முதலிய துறைகளிலும் கேரளம் முன்னணியில் நிற்கிறது. கேரளத்தில் நடைபெறும் புதிய ஜனநாயக சோதனை வெற்றியுற ஜனநாயக உள்ளம் படைத்த சகல மக்களும் ஆதரிக்கவேண்டும் என்று கோரப்பட்டது. எதிர்க் கட்சிகள் அவதூறுப் பிரசாரம் தொட்டு அத்துமீறிய பலாத்காரச் செயல்வரையில் இறங்கி கேரள சர்க்காரைக் கவிழ்க்கச் சதி செய்வதாயும் தேச முற்றுமுள்ள மக்கள் கேரள சர்க்காருக்கு 'உறுதுணையாக நிற்பார்கள் என்றும் சுட்டப்பட்டது. அல்ஜிரிய விடுதலைப் போராட்டத்திற்கு ஆதரவளிக்க நிதி திரட்டப்பட்டது.

## இந்தியாவுக்காகவே வாழ்வோம்

### ஆசிரியர் பயிற்சி பள்ளிகளும், மாணவ ஆசிரியர்களும்

சென்னை, ஏப். 5—

சென்னை ராஜ்யத்தின் 13 ஜில்லாக்களிலும் மொத்தம் 139 ஆசிரியப் பயிற்சி பள்ளிகள் இருக்கின்றனவென்றும், அவற்றில் 15,375 பேர் ஆசிரியப் பயிற்சி பெறுகிறார்களென்றும், இவற்றில் அரசாங்கம் நடத்தும் பயிற்சிப் பள்ளிகள் 72 என்றும் நிதியமைச்சர் ஒரு கேள்விக்கு பதிலளித்தார். வருடந்தோறும் 7800 ஆசிரியர்கள் பயிற்சி பெற்று வெளிவருவதாகவும், அவர்களுக்கு வேலை கிடைத்து வருவதாகவும்கூறினார்.

### காஷ்மீர் பிரதமர் பக்ஷி குலாம் உறுதி

பதான்கோட், ஏப். 5—

காஷ்மீர் பற்றி டாக்டர் கிரகாம் சமர்ப்பித்துள்ள 5 அம்ச யோசனைகள் நிராகரிக்கப்பட வேண்டியவை மட்டுமல்ல, கடுமையாகக் கண்டிக்கப்பட வேண்டியவையும் கூட என்று காஷ்மீர் பிரதமர் பக்ஷிகுலாம் மகமது இன்று கூறினார்.

இரண்டாவது குஜ்ஜார் மகாநாட்டை திறந்து வைத்து அவர் மேலும் பேசுகையில்,இந்த மோசமான யோசனைகளை இந்தியா நிராகரித்தது ரொம்பவும் சரியே என்று கூறினார்.

#### இந்தியாவுக்காக

இந்தியா காஷ்மீர் உறவு பிரிக்க முடியாதது; உடைக்க முடியாதது. லட்சோப லட்ச காஷ்மீரிகளின் இன்பக் கனவுகளை நிறைவேற்றக்கூடிய இந்தியாவுக்காக நாங்கள் வாழ்வோம், இந்தியாவுக்காகவே அவசியமானால் சாவோம் என்றார்.

#### ஏற்கமுடியாது

நேற்று பத்திரிகை நிருபர்கள் மகாநாட்டில் பிரதமர் நேரு பேசுகையில், கிரகாம் யோசனைகளை ஒரு போதும் ஏற்கமுடியாதென்றும், பாகிஸ்தானில் ஐ. நா. படைகள் நிறுத்தப்படுவதை அனுமதிக்க முடியாதென்றும், முதலில் காஷ்மீரின் ஒரு பகுதியிலிருந்து பாகிஸ்தான் துருப்புகள் வாபஸ் பெறப்படவேண்டும் என்றும், அதன் பின்னரே பேச்சு வார்த்தைகள் சாத்தியம் என்றும் தெரிவித்தது இங்கு குறிப்பிடத்தக்கது.

## பிரிட்டனில் சமாதான அணிவகுப்பு

### 2000 பேர் 50 மைல் தூர யாத்திரை

#### அணு ஆயுத சோதனைகளுக்கு கண்டனம்

லண்டன், ஏப். 4—

இன்று மாலை பிரிட்டனின் தலைநகர் லண்டனில், ட்ராபால்கர் சதுக்கத்தில் ஆயிரக்கணக்கான மக்களடங்கிய பெருங் கூட்டம், 1945-ல் அமெரிக்கா ஜப்பானில் ஹிரோஷிமா, நாகசாகி என்ற இடங்களில் வீசிய அணு குண்டுகளினால் மரணமடைந்த லட்சக்கணக்கான மக்களுக்கு தலைவணங்கி மௌன அஞ்சலி செலுத்தியது.

பிறகு அந்தக் கூட்டத்தினர் ஒரு வரிசைக்கு 3 பேராக அணிவகுத்து நின்று, அணு ஆயுத சோதனை எதிர்ப்பு யாத்திரையைத் தொடங்கினர். 50 மைல் தூரத்திலுள்ள பிரிட்டிஷ் அணு ஆயுத ஆராய்ச்சி நிலையத்திற்கு அவர்கள் புறப்பட்டனர்.

அணு ஆயுத சோதனை எதிர்ப்பு கோஷங்கள் அடங்கிய பெரிய பாவாட்டாக்களை ஊர்வலத்தினர் பிடித்துக் கொண்டிருந்தனர். ஊர்வலத்தில் வயதானவர்கள், வாலிபர்கள், பெண்கள், இரண்டு உலக யுத்தங்களிலும் பங்கெடுத்துக் கொண்ட மாஜி பட்டாளத்தார் ஆகியோர் இருந்தனர். ஊர்வலம் துவக்கப்படுவதற்கு முன்னால் ட்ராபால்கர் சதுக்கத்தில் 6000 பேருக்கு மேற்பட்ட மக்கள் கூடியிருந்தனர். சமாதான யாத்திரையில் சுமார் 2000 பேர் பங்கு கொண்டனர்.

சென்ட்பால் மாதாகோயிலைச் சேர்ந்த கேனன் எல். ஜே. காலின்ஸ், பிலிப் டோயென்பீ (முன்னாள் பார்லிமெண்ட் தொழிற் கட்சி அங்கத்தினர்) மைக்கேல் புட், பாயாட் ரஸ்டின் ஆகிய பிரிட்டிஷ் பிரமுகர்கள் கூட்டத்தில் அணு ஆயுத சோதனைகளை நிறுத்த பிரிட்டனும் முன் வரும்படி வற்புறுத்தினர்.

இதே சமயத்தில் அமெரிக்காவிலும்இதேபோல் பிலடெல்பியா நகரத்திலிருந்து நியூயார்க் நகரத்திற்கு 90 மைல் தூர சமாதான யாத்திரை ஒன்றும் நடைபெற்றது.

### அமிர்தசரஸ் காங்கிரசுக்கு தமிழ்நாடு பிரதிநிதிகள்

சென்னை, ஏப். 3—

நேற்றும், இன்றுமாக அமிர்தசரஸ் விசேஷ கட்சி மகாநாட்டிற்குத் தமிழ் நாட்டிலிருந்து 39 பிரதிநிதிகள் சென்றுள்ளனர். திருச்சியிலிருந்து தோழர்கள் ராமச்சந்திரன், கே. பி. எஸ். கோன், உமாநாத், நாராயணன், என். கிருஷ்ணசாமி, கே. டி. ராஜு, கரூர் இராமசாமி முதலானோர் நேற்று சென்னையிலிருந்து புறப்பட்டுச் சென்றனர். தென்னாற்காடு தோழர்கள் பி. ஜெயராமன், புருஷோத்தமன், எஸ். நடராஜன் முதலானோரும் நேற்றுப் புறப்பட்டனர்.

இன்று புறப்பட்டுச் சென்ற பிரதிநிதிகள் :

தோழர் பி. சீனிவாசராவ், வி. பி. சிந்தன், கே. முத்தையா, டி. ஆர். கணேசன், ஹரிபட், சாமுவேல் (சேலம்) கே. எஸ். பார்த்தசாரதி, மணலி கந்தசாமி, வி. ராமசாமி, ஏ. எம். கோவிந்தராஜன், எம். மாசிலாமணி, கே. ரமணி, பி. கே. ராமசாமி, எம். பூபதி, ஜோதினத், நாராயணன் (கோவை), வி. சுப்பையா, எஸ். ஏ. முருகானந்தம், ஆர். நல்லகண்ணு.

### திருவாடானை உபதேர்தல்

#### மந்தமான வாக்குப் பதிவு

மதுரை, ஏப். 5—

திருவாடானை உபதேர்தலுக்கான வாக்குப் பதிவு இன்று நடைபெற்றது. இந்த உபதேர்தலில் எஸ். ராமகிருஷ்ண தேவர் (காங்கிரஸ்), கரியமாணிக்க அம்பலம் (ஜனநாயக காங்கிரஸ்), ராம வெள்ளையன் (தி மு க) ஆகியோர் போட்டியிட்டனர்.

வாக்குப் பதிவு பொதுவாக மந்தமாக இருந்தது. எல்லா வாக்குச் சாவடிகளிலும் ஆண்களை விட பெண்கள் அதிகமாக வந்து ஓட் போட்டனர். இந்த தொகுதியின் மொத்தம் வாக்காளர்கள் 83346ல் 50 சதவிகிதம் பேர் வாக்களித்திருப்பார்கள் என்று சொல்லப்படுகிறது.

ஓட்டுகள் எண்ணிக்கை ஏப்ரல் 7-ம் தேதி நடைபெறும்.

## புதிய விற்பனை வரிச் சட்டம் ஒரு வருடத்துக்கு ஒத்திவைப்பு

### எம். கல்யாணசுந்தரம் கேள்விக்கு அமைச்சர் வெங்கட்ராமன் பதில்

சென்னை, ஏப். 5—

புதிய விற்பனைவரி மசோதாவின்மீது செலக்ட் கமிட்டி அறிக்கை சமர்ப்பிக்கும் காலவரையை, இவ்வருடம் நவம்பர் மாதம்வரை ஒத்திப்போடவேண்டுமென்று, அமைச்சர் ஆர். வெங்கட்ராமன் சபையின் அனுமதி கோரினார்.

அதுசமயம் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் எம். கல்யாணசுந்தரம் எழுந்து, "அதுவரை வியாபாரிகள் எந்தச் சட்டத்தின்கீழ் கணக்கு வைக்கவேண்டுமென்பதும், புதிய சட்டம் நிறைவேற்றப்படுமானால் அது 1—4—59லிருந்துதான் அமுல் நடத்தப்படுமென்பதும் சர்க்காரின் அபிப்பிராயமா? அதை தெளிவாகத் தெரியப்படுத்த வேண்டும்" என்று கேட்டார்.

அதற்கு அமைச்சர், "புதிய சட்டம் 1-4-59 முதல்தான்அமுல் நடக்கும். அதுவரை நிகழும் ஒரு வருஷத்துக்கு பழைய சட்டத்தின் படிதான் வரிவசூல் செய்வதும், கணக்கு வைக்கப்படுவதும் இருக்கும்" என்று தெரிவித்தார்.

### பஞ்சாயத்துகளின் செகண்டரி கிரேடு ஆசிரியர் சம்பளம்

சென்னை, ஏப். 5—

பஞ்சாயத்துப் பள்ளிக்கூடங்களில் வேலை பார்க்கும் செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கு மற்ற நிர்வாகங்களின் கீழுள்ள பள்ளிக்கூடங்களில் வேலை பார்க்கும் ஆசிரியர்களுக்குக் கொடுக்கப்படும் அதே சம்பளங்கள் கொடுக்கப்படவில்லையென்றும், இப்பிரச்சினை பரிசிலனையில் இருப்பதாகவும், முடிவு தெரிந்தவுடன் தெரிவிக்கப்படுமென்றும் ஒரு கேள்விக்கு நிதி அமைச்சர் பதிலளித்தார்.

### 2-வது மத்திய சம்பளக் கமிஷன்

#### பொன்மலை லேபர் யூனியன் தலைவர்களுக்கு சாட்சியம் அளிக்க அழைப்பு

பொன்மலை, ஏப். 5—

தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியன் தலைவர் எம். கல்யாணசுந்தரம் அவர்களுக்கு இரண்டாவது சம்பளக் கமிஷனிடமிருந்து கடிதம் வந்துள்ளது. தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியன் சார்பில் தலைவரும், பொதுக்காரியதரிசியும், டில்லியில் 15–4–58-ம் தேதி செவ்வாய் கிழமை காலை 9-30 மணிக்கு கமிஷன் முன்பு சாட்சியமளிக்க வருமாறு அழைக்கப்பட்டுள்ளனர்.

இந்த அழைப்பிற்கிணங்க பொதுக்காரியதரிசி தோழர் சே. அனந்தநம்பியார் அவர்களும், இன்னும் சிலரும் லேபர் யூனியன் சார்பில் செல்லுவார்கள் என்று அறிகிறோம். தோழர் கே. டி. ராஜு, என். கிருஷ்ணசாமி, பார்வதி கிருஷ்ணன் எம்.பி. முதலியவர்களும், லேபர் யூனியன் சார்பில், தோழர் நம்பியாரின் தலைமையில் கலந்து கொள்வார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. (ந. நி.)

# மக்கள் மன்றம்

## பாரபட்சம்

கேரள ராஜ்யத்திற்கு மாதம் 25 ஆயிரம் டன் அரிசி கொடுப்பதாக வாக்களித்திருந்த மத்திய அரசாங்கம் பின்னுல் 10 ஆயிரம் டன்தான் கொடுக்க முடியும் என்று கூறிவிட்டது. இதன் விளைவாக கேரள சர்க்கார் ஆந்திராவில் வியாபாரிகளிடம் அரிசி வாங்க நேரிட்டது. இதுவும் போதாமல் கேரள உணவு நிலை பற்றி கேரள உணவு மந்திரி, கே. சி. ஜார்ஜ் கொடுத்த விளக்கங்களை மத்திய உணவு இலாகா உதவிமந்திரிஏ.எம்.தாமஸ்மிகைப் படுத்திய செய்திகள் என்ருர். நிலைமையைநன்ருகஅறிந்தும்திண்டாடவிட்டுப் பார்க்கலாம் என்ற பாரபட்ச எண்ணம் தவிர வேறு எதுவும்மந்திரிஏ.எம்.தாமஸுக்கு இல்லை என்று நினைக்கிறேன். தமக்குப் பிடிக்காத ஆட்சி என்ருல் எதை வேண்டுமாயினும் செய்வதா?

கேசவன்
திருச்சூர்.

•

## சபாஷ் மாலத்தீவு

இலங்கையை ஒட்டியுள்ள சின்னஞ்சிறு தீவு மாலத்தீவு. இலங்கையில் இருந்த மிகப் பெரிய கப்பல் தளமான திரிகோணமலையையும், விமானத்தளமான கட்டுநாயகாவையும் விட்டு பிரிட்டன் வெளியேற வேண்டி ஏற்பட்டது. எனவே கிழக்கு ஆசியாவில் தளங்கள் தேடிய பிரிட்டன் மாலத் தீவில் வைத்துக் கொள்ள எண்ணியது. ஆனால் மாலத்தீவு சர்க்கார் தளம் அனுமதிக்க முடியாது. இது எங்கள் அரசுரிமைக்கும், சுதந்திரத்திற்கும் பாதகம் விளைப்பது என்று கூறிவிட்டது இந்த ஏகாதிபத்திய எதிர்ப்புணர்ச்சியைப் பாராட்டுகிறோம். ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளின் ஒருமைப்பாடுதான் மாலத் தீவுக்கு இந்த துணிவைக் கொடுத்துள்ளது. ஏகாதிபத்தியம் எந்த ஒரு சிறு நாட்டிடமும் வாலாட்ட முடியாது என்ற நிலை ஏற்பட்டுள்ளது.

சபாஷ் மாலத் தீவு! மாலத் தீவுக்கு பாதகமாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் ஏதாவது நடவடிக்கையில் இறங்கினுல் இலங்கை மக்கள் பார்த்துக் கொண்டு வாளாகிடக்க மாட்டார்கள்.

இலங்கை மாணவன்
சென்னை.

•

## கதவடைப்பு தொத்து நோய்

தொழிற்சாலைகளில் கதவடைப்புச் செய்வது என்பது ஒரு தொத்து நோய் போலப் பரவி வருகிறது. முதலாளிகளுக்குள் சண்டை, ஊழல் ஏதாவது ஒன்றுக்காகப் பாடுபடும் தொழிலாளர்களைப் பட்டினி போட்டுக் கதவடைப்புச் செய்கின்றனர் கல்நெஞ்சர்களான முதலாளிகள். சென்னையில் ஆயில் கம்பெனிகள், பீடித் தொழிற்சாலைகள் இன்னும் பிற பல தொழில் நிலையங்களில் அடிக்கடி கதவடைப்பு நடக்கிறது. இதை சர்க்கார் அனுமதிக்கக் கூடாது.

அகாரணமாக கதவடைப்புச் செய்யும் முதலாளிகள் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். அதோடு இத்தகைய தொழிற்சாலைகளை சர்க்கார் எடுத்து நடத்த முன்வர வேண்டும். இவ்வாறு செய்யாவிட்டால் இவற்றில் வேலைசெய்யும் தொழிலாளர்களுக்கு எவ்விதப் பாதுகாப்புமே இல்லை என்ற வேதனையான நிலைதான் ஏற்படும்.

முனிசாமி
சென்னை

## சட்ட சபை அங்கத்தினர்களின் விளையாட்டுப் போட்டி

சென்னை, ஏப். 6—

சென்னை சட்டப் பேரவை உறுப்பினர்கள் தின விழா 9-4-58 புதனன்று ராஜாஜி மண்டபத்துக்குப் பக்கத்திலுள்ள மைதானத்தில் காலை 7 மணி முதலும் பிற்பகல் 2–30 மணி முதலும் ஆரம்பமாகும். எம். எல். ஏ.கள் விளையாட்டுப் போட்டிகளில் பங்கெடுத்துக் கொள்ளுகிருர்கள்.

ஓட்டம், சட்டி உடைத்தல், கோணிப் பை ஓட்டம், குண்டு தூக்கியெறிதல், கயிறு இழுப்பு, இசைப் பந்தெறிதல், இசை நாற்காலி ஆட்டம், மெது நடைப் போட்டி, குழந்தைகள் ஓட்டம், குத்துச் சண்டை, விநோத உடை, கம்பி வளைத்தல், சங்கிலி அறுத்தல் முதலியன நடைபெறும்.

பல போட்டிகளில் பெண் எம். எல். ஏ.க்களும் கலந்து கொள்ளுகிருர்கள்,

மாலை 6–15 மணிக்கு எம். எல். ஏ.கள் நாடகத்தில் நடிப்பார்கள். வெற்றி பெற்றவர்களுக்கு கவர்னர் பரிசுகள் வழங்குவார்.

# நம்மை அவமதிக்கும் "பவானி ஜங்ஷன்" படம் அனுமதிக்கப்பட்டதேன்?

## லோகசபையில் தங்கமணி கேள்வி

புதுடில்லி, ஏப் 1—

"பவானி ஜங்ஷன்" என்ற ஆங்கில சினிமாப் படம் இந்தியாவை அவமதிப்பதாக உள்ளதென்றும் அதைத் திரையிடுவதற்கு அரசாங்கம் ஏன் அனுமதியளித்ததென்றும் தோழர் கே டி கே. தங்கமணி லோக சபையில் நேற்றுக் கேட்டார். அது சம்பந்தமாக எதிர்ப்புகள் வந்துள்ளதா என்றும், சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளதென்றும் அவர் கேட்டார்.

அப்படத்திற்கு எதிர்ப்பு வந்துள்ளதென்றும், ஆட்சேபகரமான பகுதிகள் வெட்டப்பட்ட பின்னரே காட்டப்படுகிறதென்றும் சர்க்கார் தரப்பில் பதில் கூறப்பட்டது. அது பற்றிய விவாதம் பின்வருமாறு:

கேள்வி: படத்தில் 1946-ம் வருட கப்பற்படை (ஆர்.ஐ.என்.) ஸ்ட்ரைக் பற்றியும், ரயில்வே ஸ்ட்ரைக் பற்றியும் திருத்திக் கூறப்பட்டுள்ளதா?

மந்திரி பதில்: விபரத்துக்குள் போக முடியாது. படத்தின் உரிமையாளர்கள் தாங்களே சில பகுதிகளை வெட்டியுள்ளனர்.

தங்கமணி: நான் படம் பார்த்தேன். காங்கிரஸ் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி பற்றி அதில் அவதூருன விஷயங்கள் உள்ளன.

மந்திரி: விபரங்களை எழுத்து மூலம் கொடுத்தால் கவனிக்கிறேன்.

கேள்வி: காங்கிரஸ் கட்சி பற்றி........

சபாநாயகர்: மந்திரி விபரம் தெரியவில்லை என்கிருரே. அடுத்த கேள்வி.

தங்கமணி: ஒரு கேள்வி.

மூர்த்தி: ஆங்கிலோ இந்தியரைப் பற்றியும் அதில் அவமானமாக உண்டு.

சபாநாயகர்: மந்திரி தெரியாதென்கிருர்.

வி.பி. நாயர்: லட்சக்கணக்கானவர்கள் பார்த்திருப்பார்கள்.

சபாநாயகர்: தங்கமணி கேள்வி பகுதி விபரமாக இருக்கிறது. மந்திரி எல்லா விபரங்களுடன் இங்கு வரவேண்டும்.

கேஸ்கர் (மந்திரி): அபிப்ராயம் சார். அருவருப்பானதை வெட்டி விட்டோம்.

### இதர கேள்விகள்

மோட்டார் தொழிலாளர் சட்டம் பற்றிய ஒரு கேள்விக்கு, "முக்கூட்டுக் கமிட்டி சிபார்சு வெளியிடப்பட்டுள்ளது; அதை இங்கு சமர்ப்பித்துள்ளோம்", என்று தொழிலாளர் மந்திரி கூறினுர்.

கேள்வி: சென்ற வருடம் ஏ. கே. கோபாலனின் மசோதா விவாதிக்கப்பட்டபோது, முக்கூட்டுக் கமிட்டி சிபார்சை எதிர்பார்ப்பதாக சொன்னீர்கள் இந்த செஷனில் வருமா?

பதில்: சீக்கிரம் கொண்டுவர முயற்சிப்போம்.

### வீடுகட்டக் கடன்

2. (a) கேள்வி: மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்கு வீடு கட்டிக்கொள்ள கடன் கொடுக்கப்படுவதுண்டா?

(b) தபால், தந்தி சிப்பந்திகளுக்கு எவ்வளவு கொடுக்கப்பட்டுள்ளது?

(c) நாலாம் வகுப்பு சிப்பந்திக்கு உண்டா?

பதில்: (a) ஆம். (b) 22-3-58 வரை தபால், தந்தி இலாகாவில் 15 பேருக்கு சாங்ஷன் செய்யப்பட்டுள்ளது. (c) ஆம்.

# என்.ஜி.ஓ.சம்பளத்தை வெட்டுவீரா?

— வேதரத்னம் கேள்வி

## எதிர்க்கட்சிகள் எதிர்க்குமே!

—நிதியமைச்சர் பதில்

சென்னை, ஏப். 5—

அரசாங்கம் தங்கள் சிப்பந்திகளின் சம்பளத்திற்காக செலவிடும் தொகை எவ்வளவு? அரசாங்கத்தின் மொத்தச் செலவில் மேற்படி தொகை எத்தனை சதவிகிதம் என்று காங்கிரஸ் அங்கத்தினர் திரு வேதரத்தினம் கேட்டார்.

அதற்கு நிதியமைச்சர், அரசாங்க சிப்பந்திகளுக்கு 19 கோடியே 78 லட்சம் ரூபாய் செலவாகுவதாகவும், இது மொத்தச் செலவில் 30 சதவிகிதம், என்றும் பதில் அளித்தார்.

### சம்பளத்தை வெட்டு

அதன்பேரில் திரு. வேதரத்தினம் எழுந்து "இந்த சத விகிதம் அதிகமாக இருப்பதால், இதைக் குறைக்க சர்க்கார் முன்வருமா?" என்று கேட்டார்.

அதற்கு நிதியமைச்சர், "இப்போதைய சம்பளத்தை அதிகப்படுத்துமாறு எதிர்க் கட்சிகள் வற்புறுத்துகிருர்களே!" என்ருர்.

## தேவிகுளம் உபதேர்தல் ஒத்திப் போடப்படலாம்

### சுப்ரீம் நீதி மன்றத்திற்கு ரோஸம்மா புன்னூஸ் மனு

புதுடில்லி, ஏப். 4—

தேவிகுளம் தொகுதி தேர்தலை ரத்துச் செய்து உயர்நீதி மன்றம் அளித்துள்ள தீர்ப்புப் பற்றி ரோஸம்மாபுன்னூஸ் சுப்ரீம் நீதி மன்றத்திற்கு மனுச் செய்திருக்கிருர். இந்த மனு விசாரணை செய்யப்பட்டு முடிவு தெரியும் வரை தேவிகுளம் உபதேர்தல் ஒத்திவைக்கப்படலாம் என்று தெரிகிறது.

## வாணியம்பாடியில் ஓட்டல் தொழிலாளர் சங்கம் துவக்க விழா

வாணியம்பாடி, ஏப். 1—

சென்ற மாத இறுதியில் வாணியம்பாடியில் தோழர் சையத் உமர் தலைமையில் நடைபெற்ற நகர ஓட்டல் தொழிலாளர் ஜெனரல்பாடிக் கூட்டத்தில், வாணியம்பாடி ஓட்டல் தொழிலாளர் சங்கம் அமைக்கப்பட்டது. சையத் உமர் தலைவராகவும், சையத் மொய்தீன் உபதலைவராகவும், எஸ். எம். ஜலீல் காரியதரிசியாகவும், எம். பி. மொய்தீன் உதவிக் காரியதரிசியாகவும், இதர நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## கோவையில் ஜனநாயகக் காங்கிரஸ் கூட்டம்

கோயமுத்தூர், மார்ச் 30—

கோவை காந்தி சதுக்க மைதானத்தில் இன்று ஜனநாயகக் காங்கிரஸ் சார்பில் திரு. சிரங்கம் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் மதுரை திரு கே. எஸ். கலியபெருமாள், மூணுறு திரு. அக்கினிதத் பி. சீனிச்சாமி ஆகியோர், சென்னை சர்க்காரின் ஜனநாயக விரோதப் போக்கைக் கண்டித்தும், கேரள சர்க்காரின் சாதனைகளைப் பாராட்டியும் பேசினர்.

# பல் வைத்தியப் பயிற்சிப் பகுதி இல்லாத பல்கலைக் கழகத்தில் பட்டம் வாங்கியதாக பல் வைத்திய பேராசிரியராகியுள்ளனரா?

## எம். கல்யாணசுந்தரம் கேள்வி

சென்னை, ஏப். 5—

சட்ட சபையில் கேள்வி நேரத்தின்போது, கம்யூனிஸ்ட் தலைவர் எம். கல்யாணசுந்தரம் எழுந்து "பல் வைத்தியத்துறை பேராசிரியர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு சென்னை வைத்தியக் கல்லூரியில் எந்த அடிப்படையில் யோக்கியதாம்சம் நிர்ணயிக்கப்படுகிறது?

ராஜ்ய பல் வைத்திய சபையிடமிருந்து, தற்போதைய யோக்கியதாம்ச நிர்ணயமானது பல் வைத்தியத்துறைக்கு எவ்வளவு யோக்கியதாம்சம் வேண்டுமோ அந்த அளவு இல்லையென்று கண்டித்து சர்க்காருக்கு புகார் அனுப்பியிருக்கிருர்களா? அப்படியானுல் அதன் மீது எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள நடவடிக்கைகள் யாவை?" என்று கேட்டார்.

### தகுதியானவர்தானும்!

அதற்கு ரெவினியூ அமைச்சர் திரு மாணிக்கவேலர் பதிலளிக்கையில், 'தகுதியுடையவர்கள் என்று கருதிதான் கலிபோர்னியா யூனிவர்சிடியும் சர்வீஸ் கமிஷனும் நியமித்துள்ளார்கள்' என்ருர்.

### போலி டாக்டர்கள்

உடனே கல்யாணசுந்தரம் எழுந்து, ஒரு கடிதத்தை சபை முன் காட்டி, "கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் பல் வைத்தியப் பகுதியே இல்லையென்று இதோ எனக்கு கடிதம் வந்திருக்கிறது. அப்படியிருக்க அங்கு பல் வைத்திய பட்டம் எப்படிக் கொடுத்திருக்க முடியும்?" என்று ஒரு மறுப்புக் கேள்வி போட்டார்.

அதற்கு மந்திரி மாணிக்கவேலர், "ஒரு தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்" என்று கூறிவிட்டார்.

## உப்பளத் தொழிலாளர் மகாசபை கூட்டம்

பொன்னேரி, மார்ச் 31—

பொன்னேரி தாலுக்கா உப்பளத் தொழிலாளர் சங்க பொது மகாசபைக் கூட்டம் 16–3–58 அத்திப்பட்டு ரயில்வே ஸ்டேஷன் அருகில் வல்லூர் தோழர் டி. குப்புசாமி அவர்கள் தலைமையில் கூடியது. கூட்டத்திற்குப் பல உப்பளங்களிலிருந்து தொழிலாளர்கள் கலந்து கொண்டனர். தொழிலாளர்களின் குறைகளைப் பற்றியும் கட்டுப்பாட்டைப் பற்றியும் முதலாளிகள் தொழிலாளர்களுக்கு செய்யும் துன்பங்களை விளக்கியும் தோழர் கே. செஞ்சுராமலிங்கம், பி. நடராஜன் சங்க செயலாளர் சி. கே. மாணிக்கம் ஆகியோர் விளக்கிப் பேசினர்.

பிறகு, தற்போது பொன்னேரி தாலுக்காவில் மட்டும் இருக்கும் உப்பளத் தொழிலாளர் சங்கத்தை ஜில்லா உப்பளத் தொழிலாளர் சங்கமாக மாற்றி அமைப்பது என்றும், மே மாதம் முதல் வாரத்தில் உப்பளத் தொழிலாளர் மாநாட்டை அத்திப்பட்டில் நடத்துவதென்றும், மாநாட்டிற்கு தொழிற் சங்கத் தலைவர் தோழர் கே.டி.கே. தங்கமணி எம்.பி. அவர்களையும் தூத்துக்குடி பி. ஐசக், எஸ். ஏ. முருகானந்தம் அவர்களையும், தொழில் மந்திரி ஆர். வெங்கட்ராமன் அவர்களையும் அழைப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

## பொன்னேரி தாலுகா ஓட்டல் தொழிலாளர் சங்கம்

பொன்னேரி, மார்ச். 31—

பொன்னேரி தாலுகா ஓட்டல் தொழிலாளர் மகாசபைக் கூட்டம் 26–2–58 அன்று பொன்னேரி தாலுகா விவசாயிகள் சங்க அலுவலகத்தில் திரு. டி. பி. வரதன் அவர்கள் தலைமையில் கூடியது. கூட்டத்திற்கு தாலுகாவிலிருந்து தொழிலாளர்கள் ஏராளமாகக் கலந்து கொண்டார்கள். தொழிற்சங்க அவசியத்தையும் கட்டுப்பாட்டையும் விளக்கி தோழர்கள் சி. கே மாணிக்கம், கே. சம்பந்தம், கே. பாலகிருஷ்ணன் முதலியோர் விளக்கிப் பேசியபின், திரு.எஸ். கிருஷ்ணமூர்த்தி (பி. ஏ.பி.எல்.) தலைவராகவும், கே. சம்பந்தம், டி. பி. வரதன் உபதலைவர்களாகவும், கே. பாலகிருஷ்ணன், காரியதரிசியாகவும் இதர நிர்வாகிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## நம்பியூர் பிர்க்கா விவசாயிகள்

நம்பியூர், மார்ச். 28—

நம்பியூர் பிர்க்கா பழைய ஐயம்பாளையம் கிராமத்தில் 27–3–58 அன்று கிராம விவசாய சங்கத்தின் சார்பில், திரு. ராசாக் கவுண்டர் தலைமையில் நடைபெற்றக் கூட்டத்தில் தோழர்கள் ஐ. எம். ஷரீப், நஞ்சப்பன், நசீர் ஆகியோர் விவசாயிகளின் பிரச்சினைகளைப் பற்றியும், விவசாய சங்கத்தைப் பலப்படுத்த வேண்டிய அவசியம் பற்றியும் பேசினர்.

# ஒரு சல்லிக் காசுகூட பாக்கியில்லாமல் வசூலித்து ஜமீன்தார்களுக்கு தருவாராம்

## மந்திரி மாணிக்கவேலர் கூற்று

சென்னை, ஏப். 5—

இராமநாதபுரம், சிவகங்கை ஜமீன்களை சர்க்கார் எடுத்துக் கொள்ளுகிற காலத்தில், அந்த ஜமீன்தார்களுக்கு விவசாயிகள் கொடுக்கவேண்டிய பாக்கித் தொகை எவ்வளவு? 1958 ஜனவரி 31-ந் தேதி முடிய எவ்வளவு வசூலிக்கப்பட்டிருக்கிறது? இன்னும் வசூலிக்கப்படாமலிருக்கும் பாக்கிப் பணத்தை வசூலிக்காமல் தள்ளுபடி செய்ய அரசாங்கத்தார் உத்தேசித்துள்ளார்களா?" என்று ஜனநாயகக் காங்கிரஸ் அங்கத்தினர் திரு. கே. ராமச்சந்திரன் கேட்டார்.

### வசூலித்தே தீருவோம்

அதற்கு ரெவினியூ அமைச்சர் மாணிக்கவேலர் பதிலளிக்கையில், "20 லக்ஷத்து 99 ஆயிரத்து 637 ரூபாய் பாக்கியிருந்ததென்றும், அதில் 16 லக்ஷத்து 33 ஆயிரத்து 776 ரூபாயை வசூலித்து விட்டதாகவும், மீதி பாக்கியை தள்ளுபடி செய்ய சர்க்காருக்கு உத்தேசமில்லையென்றும் தெரிவித்தார்.

# கைத்தறி நெசவாளரை ஏமாற்றாதீர்!

## கூட்டுறவு சங்கங்களில் பெருச்சாளிகளுக்கு இடம்தராதீர்!

### வி. கே. கோதண்டராமன் விளாசல்

சென்னை, ஏப். 6—

கூட்டுறவு இயக்கத்துக்கென 2-4-58-ல் சென்னை சர்க்கார் கொண்டுவந்த 1 கோடியே 45 லக்ஷத்து 58 ஆயிரத்து 500 ரூபாய் மான்யக் கோரிக்கைமீது கம்யூனிஸ்ட் அங்கத்தினர் வி. கே. கோதண்டராமன் வெட்டுப் பிரேரணை கொண்டுவந்து பேசியதின் சாராம்சம்:

**கோதண்டராமன்**

“சபாநாயகர் அவர்களே! ஊழல் மிகுந்த இந்த மானியத்தை விவாதிக்க ஒதுக்கிய 3 மணி நேரம் போதாது. கிராம நாணயக் கூட்டுறவு சொஸைடிகளும், கைத்தறி கூட்டுறவு சொஸைட்டிகளும், வீடுகட்டும் கூட்டுறவு சொஸைடிகளும் ஏற்படுத்துவதின் நோக்கம், மக்களின் பொருளாதார நிலைமையை உயர்த்த வேண்டும் என்பதுதான். ஆனால் நமது நோக்கம் முன்னேறியிருக்கிறதா? கிடையாது. குறிப்பாக கைத்தறி நெசவுத் தொழிலாளிகளின் நிலைமை மிகமிக மோசமாக இருக்கிறது. இதிலும் சர்க்காரின் அடிப்படைக் கொள்கையை தெட்டத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகிறது.

உதாரணமாகப் பாருங்கள்! 5 லக்ஷம் பேர் வேலை செய்யக் கூடிய துணி மில்களின் முதலாளிகள், சலுகை தருமாறு சர்க்காரை வற்புறுத்தினுல், உடனே 15 கோடி ரூபாய் வரிக் குறைப்பு செய்து முதலாளிகளுக்கு சாதகம் செய்கிறார்கள்.

ஆனால் ஏழை கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் 75 லக்ஷம் பேர், அவர்களுடன் வேலை செய்யும் குடும்பத்தினரையும் சேர்த்தால் சுமார் 2 கோடிப் பேர் நம்பி வாழக்கூடிய கைத்தறித் தொழிலுக்கு ரிபேட்டைக் குறைத்துள்ளார்கள். இதிலிருந்து தெரிவதென்ன? இந்த சர்க்காரில் முதலாளிகளுக்கு சாதகமான சர்க்கார் என்றே தெரிகிறது.

தனிப்பட்டவர்களின் தொழிற்சாலைகள் எப்படி மூடப்படுகிறதோ, அதைவிட அதிகமாக கைத்தறி நெசவுத் தொழில் மூடப்பட்டு வருகின்றது. இதற்கு காரணம் என்ன? யுத்த காலத்திலும் கூட கண்டிராத அளவுக்கு கைத்தறித் துணி 40 சதவிகிதம் ஏற்றுமதி ஆகிவந்தது, இப்போது குறைந்து விட்டது.

**கைநெசவாளர் வாழ**

கைத்தறி நெசவுத் தொழிலாளர்கள் உண்மையிலேயே வாழவேண்டுமென்ற அக்கறை சர்க்காருக்கு இருக்குமேயானுல்

1 ரிபேட்டை 2 அணுவாக அதிகரிக்க வேண்டும்.

2. கதர்த் துணி விற்பனையை சர்க்காரே ஏற்று நடத்துவது போல்,கைத்தறித்துணிவிற்பனைக்கும் சர்க்காரே பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டும்.

3. விசைத்தறிகளை அனுமதிக்கக் கூடாது.

4. வியாபாரிகளை விற்பனை ஏஜெண்டுகளாக அமைக்க வேண்டும்.

5. சொஸைடிகளிலே ஏற்படும் ஊழல்களை உடனுக்குடனே விசாரணை செய்து கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும்.

6. தேவையான சாயங்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டும்.

7. தேவையான பட்டு நூல்களை நமது ராஜ்யத்திலேயே உற்பத்தி செய்யவேண்டும்.

8. சொஸைடிகளிலே எடுக்கும் துணிகளுக்கு உடனுக்குடனே பணம் கொடுக்க வேண்டும்.

9. வெளி நாடுகளுக்கு கைத்தறித் துணி ஏற்றுமதியை அதிகரிக்க வேண்டும்.

10. வெளிநாட்டு ஜவுளிகளை இறக்குமதி செய்யக் கூடாது.

11, கூட்டுறவுச் சங்க சட்டத்தைத் திருத்த வேண்டும்.

12. கைத்தறித்தொழிலைப்பற்றியும் தொழிலாளர் நிலைபற்றியும் விசாரணை செய்த கனம். நாராயணசாமி அறிக்கையை வெளியிட்டு, அவரது சிபாரிசுகளை பரிசீலனை செய்து அமுலாக்கவேண்டும்.

13. நமது ராஜ்யத்தில் உற்பத்தியாகும் நூல்களை வடபகுதி ராஜ்யங்களுக்கு அனுப்பி, துணியாக்கி, மீண்டும் அந்தத் துணி இங்கே வருவதால் செலவு அதிகமாகிறது. ஆகவே இதை நிறுத்த வேண்டும்.

14. நமது ராஜ்யத்தில் கைத்தறிக்கும் பஞ்சாலைக்கும் போட்டியாக இருப்பதால், இரண்டையும் இணைக்கக் கூடியவாறு திட்டமிருக்கவேண்டும். இரு தொழில்களையும் நம்பி வாழ்வோர் சுமார் 40 லக்ஷம் பேர் இருக்கிறார்கள்” என்றுபேசிக்கொண்டிருக்கையில்,

**காங்கிரஸ் மெம்பர் குறுக்கீடு**

காங்கிரஸ் அங்கத்தினர் என். ஆர். தியாகராஜன் குறுக்கிட்டு, “கனம் கோதண்டராமன் உடுத்தியிருப்பது கைத்தறித் துணியா? மில் துணியா?” என்று கேட்டார்.

கோதண்டராமன் தொடர்ந்து பேசுகையில், “நான் கைத்தறித் துணியையும் மில் துணியையும் தான் அணிந்திருக்கிறேன். நான் கைநெசவுத் தொழிலாளிகளையும், மில் தொழிலாளர்களையும் ஆதரிக்கிறவன். உங்களைப் போல, கைத்தறி நெசவுத் தொழிலாளிகளை ஆதரிப்பதாகப் பாசாங்கு செய்துகொண்டு, மில் முதலாளிகளை ஆதரிக்கும் போக்கு எங்களிடமில்லை” என்று பதிலளித்துவிட்டு மேலும் பேசியதாவது:

**வேறு வேலையில் ஈடுபடுத்துக!**

“கைநெசவுத் தொழிலாளர்களை காலக்கிரமத்தில் வேறு தொழில்களில் ஈடுபடுத்த வேண்டும். அதற்கான பயிற்சி செண்டர்களை அமைத்தாகவேண்டும்.

சர்க்கார் பயிற்சி எடுக்கும் காலத்தில், பகல் நேரத்தில் வசதி செய்ய முடியாத நிலைமை இருந்தாலும், அவர்களுக்கு இரவு நேரத்தில் பயிற்சியளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

கூட்டுறவுச் சங்கம் மூலமாக தொழிலை வளர்ப்பதாக சர்க்கார் சொல்லுகிறார்களே தவிர, அது போல் நடப்பதாகத் தெரியவில்லை.

உதாரணமாக, குடியாத்தம் தீப்பெட்டித் தொழிலாளர்கள், ‘கூட்டுறவு தீப்பெட்டித் தொழிற்சாலை’யை அமைக்க 600 ரூபாய் வசூலித்து பேங்கியில் போட்டு, சட்டப்படி எழுதி 2 வருடமாகிறது. இதுவரை சர்க்கார் அங்கீகாரமும் செய்யவில்லை. எடுத்து நடத்த முன்வரவுமில்லை.

**பெருச்சாளிகள்**

சட்ட திட்டங்களை மாற்றும்படிச் சொன்னால், ஆளும்கட்சி அங்கத்தினர்களுக்கு ஆத்திரம் வருகிறது.

இன்றுள்ள கூட்டுறவுச் சட்டத்தில் முதலாளிகளும், நிலப்பிரபுக்களும்தான் தலைமை தாங்கி நடத்தக் கூடிய அளவுக்கு இருக்கிறது. உதாரணமாக, ராஜபாளையத்தில், வீடு கட்டும் சொஸைட்டி ஆரம்பித்து, தொழிலாளர்கள் பொதுச் சபை கூடி ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்தார்கள்.

ஆனால் 3 மாதங்களுக்குப் பிறகு மந்திரியின் சிபாரிசின் மூலம் ரிஜிஸ்டிரார் அவர்கள் ஒரு பெரிய வியாபாரியைத் தலைவராகப் போடப்பட்டிருக்கிறது. (இப்போதைய தொழிலாளர் நல மந்திரி அல்ல. அப்போதைய மந்திரி)

**மத்திய சர்க்கார் சி. ஐ. டி. களின் தலையீடு**

கூட்டுறவுச் சங்கங்களின் சீர்குலைவுக்கு இன்னொரு காரணம், மத்திய சர்க்காரின் சி.ஐ.டி. களும், ராஜ்ய சர்க்கார் சி. ஐ. டி. களும் இலாகாக்களுக்குப் போய் ‘கம்யூனிஸ்டுகள் எங்கெங்கே கூட்டுறவு சங்கங்கள் நடத்துகிறார்களென்றும், காங்கிரஸ் எங்கெங்கே நடத்துகிறார்களென்றும் விசாரித்து, ‘ஏன், கம்யூனிஸ்டுகள் கூட்டுறவு சங்கங்கள் நடத்த அனுமதிக்கிறீர்கள்?’ என்று கேட்கப்படுகிறதாக அறியவருகிறேன். ஒரு பக்கத்திலே உங்கள் எல்லோருடைய ஆதரவும் வேண்டும். அப்பொழுதுதான் கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் நடைபெறுமென்று சொல்லுவதும், மறு பக்கத்திலே சி.ஐ.டி.கள் இதுபோல் ‘ஏன் கம்யூனிஸ்டுகளுக்கு இடம் தருகிறீர்கள்?’ என்று கேட்பதும் ஒழுங்குதானா என்று கேட்கிறேன்.

**அதிகரிக்க வேண்டும்**

கூட்டுறவு சங்கங்கள் ஜில்லாவுக்கு ஒன்றுதான் இருக்கிறது. நிலப்பிரபுக்கள் உள்ள ஜில்லாக்களாயிருந்தால், அவர்களது விருப்பங்களை நிறைவேற்ற கூடுதலாக ஒன்றிரண்டு இருக்கும் கிராம நாணயச் சங்கங்களை அதிகரிக்க வேண்டும்.

இவைகளில் இன்று நிலப்பிரபுக்களின் பிடிப்பும், லேவாதேவிகளின் பிடிப்பும் அதிகமாக இருப்பதால் சாதாரண விவசாயிகளுக்கு கடன் வசதி கிடைப்பதில்லை.

**மூடிய தொழில்களைத் திற**

கூட்டுறவு தொழில் வளர்ச்சிக்காக ஒதுக்கப்படும் பணத்தைக் கொண்டு பல தொழில்களுக்கு ஏற்கனவே. 10, 15 லக்ஷம் ரூபாய் உதவி செய்தும், தொழில் நடத்தப்படாமல் மூடிக் கிடக்கக் கூடிய தொழிற்சாலைகளை உடனடியாக சர்க்கார் எடுத்து நடத்த முன் வருமானால், வேலையில்லாதாருக்கு வேலையும், தொழில் அபிவிருத்தியும் ஏற்படும்.

**என் தொகுதியிலே**

என் தொகுதியிலே ஒரு சில்க் மில் மூடிக் கிடக்கிறது. சுதர்சனு ஆயில் மில் மூடிக்கிடக்கிறது. சர்க்கரை ஆலை மூடிக்கிடக்கிறது. தீப்பெட்டித் தொழிற்சாலைகள் பல மூடிக்கிடக்கின்றன. இன்னும் இதுபோல் ஒவ்வொரு ஜில்லாவிலும் எத்தனையோ தொழில்கள் மூடிக்கிடக்கின்றன.

இவற்றை சர்க்காரே எடுத்து நடத்தினுல் எத்தனையோபேருக்கு வேலையும், பொருள் உற்பத்திப் பெருக்கும் ஏற்படும் அல்லவா!” என்றார்.

**மந்திரி பதில்**

இதற்கு தொழிலாளர் நல மந்திரி ஆர். வெங்கட்ராமன் பதில் அளிக்கையில், “சில கட்சிகள் சொஸைட்டிகளைக் கைப்பற்ற முயற்சிப்பதாக எனக்கு தகவல் வந்திருக்கிறது. இருக்கிறவர்களை நீக்க ஊழல் புகார்களைக் கிளப்புகிறார்கள். இவர்கள் வந்த பிறகு மற்றவர்கள் ஊழல் புகார்களைக் கிளப்புவார்கள். கூட்டுறவு இயக்கத்தின் பெயர் கெட்டுப் போகும். பொதுவாக ஊழல் புகார்களைக் கூறக்கூடாது” என்று கூறினார்.

இச்சமயத்தில் வி.கே. கோதண்டராமன் எழுந்து, “நான் பொதுவாகச் சொல்லவில்லை. குறிப்பாக ராஜபாளையத்தில், வீடுகட்டும் சொஸைட்டி அங்கத்தினர்கள் கூடி, தலைவராக ஒருவரைத் தேர்ந்தெடுக்க, மந்திரிகளும் அதிகாரிகளும் கூடிப் பேசி, நல்ல வசதிபடைத்த இன்னொருவரைப் போட்டிருக்கிறீர்களே, இது நியாயமா என்றுதான் கேட்டேன்” என்றார்.

**ஏழை இருந்தால் ஒழுங்காக இருக்காதாம்**

இதற்கு மந்திரி பதிலளிக்கையில், “சொஸைட்டி பணம் நல்ல முறையில் செலவழிக்கப்பட வேண்டுமாதலால், அதற்குத் தலைவராக நல்ல அனுபவமும் கௌரவமும் உள்ள ஒருவரைத்தான் போட வேண்டுமென்று ராஜபாளையத்திலுள்ள அனுபவமிக்க ரிஜிஸ்திரார் முதலிய அதிகாரிகள் தெரிவித்ததின் பேரில்தான், அப்படி ஒரு பெரியதனக்காரரைப் போட்டோம். தனது வாழ்க்கைக்கே பிறரை எதிர்பார்த்துக் கஷ்டப்படும் ஒருவரைப் போடுவது சரியல்ல என்று கருதிறேம்” என்றார்.

## நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தை மூட வேண்டுமாம்!

### ஜாயின்ட் ரிஜிஸ்ட்ரார் உத்திரவு!

அருப்புக்கோட்டை, மார்ச் 30—

அருப்புக்கோட்டை தமிழ்மணி சாலியர் நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தை மூடிவிடுவதற்கான உத்திரவை 21-1-58-ம் தேதியில் ஜாயின்ட் ரிஜிஸ்ட்ரார் பிறப்பித்துள்ளார். 20-3-53-க்குள் சங்கத்தின் ஆட்சேபனை தெரிவிக்கப்பட வேண்டும். உத்திரவு ரிஜிஸ்டர் தபாலில் பதில் ரசீது மூலமாக அனுப்பப்பட்டுள்ளதாகவும் கூறுகிறது. ஆனுல் 18-3-58 மாலை 6-மணிக்கு உத்திரவின் நகல் சங்கத் தலைவரிடம் நேரில் கொடுக்கப்பட்டு கையெழுத்தும் வாங்கப்பட்டிருக்கிறது. எனவே உத்திரவை காலத்தில் கொடுக்காமல் மறைக்கப்பட்டுவிட்டபடியால் கூட்டுறவுச் சட்டப்படி 2 மாத தவணை கேட்டு சங்கத் தலைவர் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு தந்தியும், கடிதங்களும் அனுப்பியுள்ளனர். அதிகாரிகளின் நடவடிக்கை பெரும் அதிருப்தியை சங்க மெம்பர்களிடத்திலும் பொது மக்களிடத்திலும் ஏற்படுத்தியுள்ளது.

**வரி உயர்வு கண்டனம்**

அருப்புக்கோட்டை முனிசிபாலிடி ரிவிஷன் வரி உயர்வு பழைய வரிக்கு எதிராக 3, 4 மடங்குவரை உயர்த்தி விதிக்கப்பட்டுள்ளமைக்கு நகரம் முழுதும் பெரும் கண்டனமும் குமுறலும் ஏற்பட்டுள்ளன. கைநெசவாளர்களின் நகரில், தொழில் முடக்கம் ஏற்பட்டு, வசதியற்ற நிலையிருப்பதால் அன்றாட வாழ்வுக்கே அவதிப்படும் மக்களுக்கு ரிவிஷன் உயர்வு பெரும் அநீதியாக இருக்கிறது. இதை எதிர்த்து நெசவாளர் சங்கமும், கம்யூனிஸ்ட் கட்சியும் கையெழுத்து இயக்கம் நடத்துகின்றன. 31-3-58-ல் வரி உயர்வு கண்டன ஊர்வலம். கையெழுத்துக்களடங்கிய மகஜரை முனிசிபல் ஆபீசில் கமிஷனரிடம் சமர்ப்பிக்கும். நகரின் பல்வேறு பகுதிகளில் பொதுக்கூட்டங்களும் நடத்தப்படுகின்றன.

**என். ஜி. ஓ. கோரிக்கை தினம்**

கோரிக்கை தினம் 19-3-58-ல் நகர் நேரு மைதானத்தில் பூதான ஊழியர் திரு. எஸ். செல்வராஜ் பி. ஏ. பி. டி. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஊழியர்களின் சார்பில் திரு. மயிலேறிநாதன் (என். ஜி ஓ) நல்வரவுகூறிப் பேசினுர். திரு. சுப்பு ரெட்டியார் (சப் ரிஜிஸ்தார்) திரு பி. எஸ். சங்கரலிங்கம் (கம்யூ) நல்லதம்பி (தி. மு. க.) நாராயணன் (பி. சோ.) சா. கி. அ. ராமகிருஷ்ணன் (காங்) ஆகியவர்கள் பேசினுர்கள். காரியதரிசி திரு. துரைராஜ் தீர்மானங்களை பிரரேபித்தார்.

## தமிழ் குழந்தைக்கு கேரள அமைச்சர் கௌரியின் பெயர்

சென்னை, ஏப். 5—

கேரள கம்யூனிஸ்ட் சர்க்காரின் ஓராண்டு நிறைவு விழாவை முன்னிட்டு, வண்ணுரப்பேட்டை 4-வது வட்டம் தோழர் ஜி. நாராயணசாமியின் பெண் குழந்தைக்கு ‘கௌரி’ என்று கேரள அமைச்சர் கௌரி அம்மையாரின் பெயரை தோழர் ஐ. மாயாண்டிபாரதி சூட்டினுர். விழாவுக்கு திரளான மக்கள் வந்து சிறப்பித்தனர். கௌரியின் தந்தையார் ஜனசக்தி கட்டிடநிதிக்கு ரூ. 10 நன்கொடை அளித்தார்.

## கோவை விவசாயக் கல்லூரி குறைபாடுகளைப் போக்குங்கள்

### சட்டசபையில் என். மருதாசலம்

சென்னை, ஏப். 5—

கோவை விவசாயக் கல்லூரியில் காணப்படும் பலவித குறைபாடுகளை கம்யூனிஸ்ட் அங்கத்தினர் என். மருதாசலம் மார்ச், 28-ல் விவசாய மான்யத்தின் மீது நடைபெற்ற சட்டசபை கூட்டத்தில் விளக்கிப் பேசினுர்.

“கோவை விவசாயக் கல்லூரியில், விவசாயத்துக்கு வேண்டிய பொறுக்கு விதைகள், உரம் ஆகியவற்றை உற்பத்தி செய்கிறார்கள். இந்தக் கல்லூரி பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்த போது ஒருவாறு வேலை நன்ருக நடைபெற்று வந்தது. அதை ஜெனரல் ஆபீஸாக மாற்றி, 15 அதிகாரிகளைக் கூடுதலாகப் போட்ட பிறகு வேலைக் குறைவுதான் ஏற்பட்டிருக்கிறது.

**குறைந்த கூலி**

இந்தக் கல்லூரியின் விவசாயப் பண்ணையில், பக்கத்துக் கிராமங்களிலிருந்து வரும் ஆண்களையும் பெண்களையும் கூலி வேலைக்காக அமர்த்துகிறார்கள். பெண்களுக்கு 10 அணுவும், ஆண்களுக்கு ரூ. 1¼ தான் கொடுக்கப்படுகிறது, அதுவும் சரிவரக் கிடைப்பதில்லை, 4 வாரம் வேலைசெய்தால் 1 வாரக் கூலிதான் கிடைக்கிறது. சென்ற தீபாவளி சமயத்தில் 4 வாரமும் கூலி கிடைக்கவில்லை, உடனே கல்லூரி அதிபரிடம் சென்று பார்த்தேன்! அவரோ கலெக்டரின் அனுமதி வந்தால்தான் கிடைக்கும் என்று கூறிவிட்டார்.

ஆகையால் வேலை நடக்க விவசாயக் கல்லூரியை பல டிபார்ட்மெண்டுகளாகப் பிரிக்கவேண்டும்.

மதுரை போன்ற நகரங்களிலிருந்து வந்து ஹரிஜன மாணவர்கள் பயிற்சிபெற்று வருகிறார்கள். அவர்களுக்கு சரியான சமயத்தில் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படாததினுல், பணம் அனுப்ப வேண்டுமென்று தங்கள் வீடுகளுக்கு எழுதி, பணம் வருவதில் தாமதம் ஏற்படுவதினுல், அவர்களுக்கு அபராதம் போடுகிறார்கள். இந்த முறையை ரத்து செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்” என்றார்.




படவிமர்சனம்:

# பர்தேசி

இந்தோ-சோவியத் கூட்டுத் தயாரிப்பு—டைரக்ஷன்: கே. ஏ. அப்பாஸ் & வி. எம். புரோனின்



பத்மினி-லட்சுமி

இந்தோ—சோவியத் கூட்டுத் தயாரிப்பான பர்தேசி, போர்த்துக்கீஸிய வர்த்தகன் வாஸ்கோடகாமா வருவதற்கு முன்பு இந்தியாவிற்கு விஜயம் செய்த சோவியத் யாத்ரீகர் ஒருவரைப் பற்றிய வரலாற்று உண்மையைச் சித்தரிக்கும் ஒரு கதையே.

## அபிநாசி நிகிதின்

15ம் நூற்றுண்டு அபிநாசி நிகிதின் என்ற ஒரு சோவியத் இளைஞன் இந்தியாவிற்கு வந்து சுற்றிப் பார்க்க விரும்புகிறுன். அவனது ஆசைக்குத் தடை போட அவன் தாயார், சகோதரிகள், அவனை மணம் செய்து கொள்ள விருக்கும் பெண் அத்தனை பேர்களும் முயலுகின்றனர். அவனது ஆசை பைத்தியக்காரத்தனமென்று அரச சபையினர் கேலி செய்கின்றனர். ஆனால் விடாமுயற்சியின் காரணமாக ஜார் அரசாங்கத்தின் அனுமதியையும், குடும்பத்தினரின் அனுமதியையும் பெற்றுக் கொண்டு தன் சகாக்களுடன் புறப்படுகிறுன் அபிநாசி.

## கப்பல் கொள்ளை

வால்கா நதி தீரத்திலிருந்து பாய்மரக் கப்பலில் பிரயாணத்தைத் தொடங்கிய அவர்கள் வழியில் இந்தியாவிற்கு வந்து கொண்டிருக்கும் பாரசீகத் தூதுவர்களைச் சந்திக்கின்றனர். அதன் பின்னர் கடற் கொள்ளைக்காரர்களால் பாதிக்கப்படுகின்றனர். கொள்ளைக் கூட்டத்தார்களின் சண்டையிலிருந்து தப்பி தனது நண்பனொருவனுடன் பாரசீகப் பாலைவனத்தை வந்தடைகிறுன் அபிநாசி. பாலைவனத்தின் வெப்பத்திற்கு நண்பன் பலியாகிவிடவே தனிமையாகிவிட்ட அவனை ஒரு வியாபாரிகள் கூட்டம் காப்பாற்றுகிறது. ஒரு நாள் இரவு தூங்கும்போது தொடியவன் ஒருவன் இவனது பணப் பையைக் கொள்ளையடித்துச் சென்று விடுகிறுன். பின்னர் தன்னிடமிருந்த ஒரே ஒரு மணிமாலையைக் கொடுத்து அந்த வியாபாரிகளிடமிருந்து ஒரு குதிரையைப் பெற்றுக் கொள்ளுகிறுன். அங்கிருந்து துறைமுகத்திற்கு வந்து கப்பல் ஏறுகிறுன். அந்தக் கப்பலில் இவனிடமிருந்து பணப்பையைத் தட்டிச் சென்ற திருடனைக் காண்கிறுன். அவனுடைய ஆத்திரம்தீர அவனுடன் சண்டையிடுகிறுன். இப்படியாக இந்தியா வந்தடைகிறுன் அபிநாசி.

## இந்திய விஜயம்

சகாராம் என்ற நாடோடிப் பாடகனொருவனின் பாட்டை ரசித்துக் கொண்டிருந்த சமயம் அவனது குதிரை பறிபோய்விடுகிறது அந்தப் பாடகனுடன் நட்புக்கொண்டு அவனது ஆலோசனையின்பேரில் ஆஸாத் கான் என்ற அரசனைச் சந்தித்து உதவி கோருகிறுன். ஆனால் கிறிஸ்துவனுகிய அபிநாசியை முஸ்லீமாக மாறசொல்லுகிறுன் ஆஸாத்கான், அபிநாசி மறுத்துவிடவே ஆஸாத் கானின் உதவியைப் பெற முடியாது போய்விடுகிறது. பின்னர் முன்பு பிரயாணத்தின் போது ஒப்புக்கொண்ட பாரஸீகத் தூதுவன் ஹஸென்பேக்கை எதிர்பாராத விதமாகச் சந்திக்கவே



ஓலேக்-அபிநாசி நிகிதின்

அவன் மூலம் ஒரு குதிரையைப் பெற்று சுற்றுப் பிரயாணத்தைத் துவக்குகிறுன்.

## சம்பாவின் காதல்

பாம்பு கடித்த சம்பா என்ற இளம் பெண்ணுக்குச் சிகிச்சையளித்துக் காப்பாற்றும் சந்தர்ப்பமொன்று அபிநாசிக்குக் கிடைக்கிறது. பின்னொரு சமயம் மழை காலத்தில் அபிநாசிக்குச் சம்பாவின் பெற்றோர்கள் உதவியளித்து தங்களது இல்லத்தில் தங்கவைக்கின்றனர். அங்கிருந்தவாறே கிராமப்புற வாழ்க்கைத்தரங்களை கண்டு அனுபவித்துக் கொண்டிருக்கிறுன். அப்போது சம்பாவிற்கும் அவனுக்கும் காதல் ஏற்படுகிறது. ஆனால் அவளது பெற்றோர்கள் அவளை வேறிடத்தில் மணமுடிக்கத் தீர்மானிக்கும் விஷயத்தைக் கேள்விபுற்றுத் தனது எண்ணத்தை மாற்றிக்கொள்ளுகிறுன் மழைக் காலம் முடிந்ததும் மீண்டும் தனது சுற்றுப் பிரயாணத்தை ஆரம்பிக்கிறுன்.

## வர்த்தக உடன்படிக்கை

நண்பன் சகாராமுடன் அஜந்தா எல்லோராக் குகைகளுக்குச் சென்று அங்குள்ள கலைத்திறன்களடங்கிய சிற்பங்களையெல்லாம் கண்டுகளிக்கிறுன். அங்கு லட்சுமி என்ற நடனக்காரியின் நடனத்தைக் கண்டு பிரமிக்கும் அவன், அவளது அழைப்பிற்கிணங்கி பிடாரிலிருக்கும் அவளது இல்லம் செல்லுகிறுன். லட்சுமியின் உதவியால் பிடார் சமஸ்தானத்தில் முஹமத்கானைச் சந்தித்து இந்திய ரஷ்ய வர்த்தக ஒப்பந்தமொன்று செய்துகொள்ளுகிறுன்.

## பரஸ்பர உதவி

இந்தியாவில் மூன்றுண்டு காலம் சுற்றுபிரயாணம் செய்து தான் வந்த காரியத்தை முடித்துக்கொண்டு திரும்பும்போது, கடைசியாக சம்பாவைப் பார்த்து விட்டுப் போகலாமென்று வருகிறுன். சம்பா மணமாகி, ஒரு குழந்தைக்குத் தாயாக இருப்பதைக் காண்கிறுன். அவளது குடும்பம், கஷ்டமான நிலையிலிருப்பதை உணர்ந்து அவளுக்குத் தெரியாமல் தனது பணப்பையை ஜன்னல்வழியாக வீட்டிற்குள் போட்டுவிட்டுச் செல்லுகிறுன். நாடு திரும்புவதற்குக் கையில் காசில்லை. நோயால் வாடிக் கொண்டிருந்த நாடோடிப் பாடகன் சகாராமைத் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்து அவனுக்கு உதவி செய்கிறுன். உடல் நலம் பெற்றெழுந்த சகாராம் பாட்டுப் பாடி, பணம் திரட்டிக்கொடுத்து அபிநாசியை ஊருக்கு அனுப்புகிறுன். இதுதான் கதை.

இந்தோ-சோவியத் நட்புறவு இன்று நேற்றல்ல 15ம் நூற்றுண்டிலேயே ஏற்பட்டுவிட்டது என்பதை நிரூபிக்கிறது இந்தப் படம்.

## நடிப்பு

கதாநாயகன் அபிநாசி நிகிதினுகப் பாகமேற்றிருப்பவர் ஓலேக் என்ற ரஷ்ய நடிகர். அவருக்களிக்கப்பட்டிருக்கும் மேக்அப்பும், அவரது நடிப்பும் அபாரமாயிருக்கின்றன. பல சமயங்களில் திருட்டுக்கு ஆளாகித் தவிக்கும் போது சோகமிக்க அவரது நடிப்பு வெகு இயற்கையாக அமைந்திருக்கின்றது.



பால்ராஜ் ஸஹானி-சகாராம்

சப்பாவாக நடிக்கும், நர்கீஸும், நாட்டியக்காரி லட்சுமியாக நடிக்கும் பத்மினியும் நன்ருக நடித்துள்ளனர். பத்மினிக்கு பாகம் மிகக்குறைவே. ஆயினும்



நர்கீஸ்-சம்பா

அவர் ஆடும் இரண்டு நடனங்கள் பிரமாதமாக அமைந்திருக்கின்றன. கலர் காட்சிகளில் பத்மினியின் முகம் சோபிக்குமளவுக்கு நர்கீஸின் முகம் சோபிக்கவில்லை.

பால்ராஜ் ஸஹானி—இவர்தான் நாடோடிப் பாடகன் சகாராம். அன்பிற்கும், நட்பிற்கும் உறைவிடமாகத் திகழ்பவர். இவருடன் கொண்ட நட்புத்தான் இருநாடுகளுக்கும் பாலமாகத் திகழ்கிறது.

## வால்காவிலிருந்து கன்யாகுமரி வரை

இப்படத்தில் ரசிக்கத்தக்க அம்சங்களில் கலர் காட்சிகளும் ஒன்று ஸோவாக் கலர் காட்சிகள் ஒவ்வொன்றும் முழுமையாகவும், கண்ணைக் கவரும் விதத்திலும் அமைந்திருக்கின்றது. படப்பிடிப்பு ஒவ்வொன்றும் மிக மிக அற்புதமாக இருக்கின்றது. வால்கா நதித் தீரம், துர்க்கமேனியா பாலைவனம், மஹாபலிபுரம் காஞ்சீபுரம், கன்னியாகுமரி, அஜந்தா, எல்லோராக் குகைகள் முதலிய காட்சிகள் அருமையாகப் படமாக்கப்பட்டிருக்கின்றன. இந்தியாவின் அன்றைய வாழ்க்கையையும் கலாச்சாரத்தையும் நன்கு பிரதிபலிப்பதாகவும் தென்னாட்டின் வைதிகச் சம்பிரதாயத்திற்கு சாட்டையடி கொடுப்பதாகவும் சில காட்சிகள் அமைந்திருக்கின்றன.

மஹாபலிபுரமும், காஞ்சீபுரமும் இப்படத்தில் முக்கிய இடங்களாகக் காட்டப்படுகின்றன. ஆனால் இங்கு வாழும் மக்கள் தமிழர்களாக இல்லை. இது ஒரு பெரிய குறையாகவே படுகிறது

அனில் பிஸ்வாஸின் சங்கீதம் பல இடங்களில் பிரமாதமாக அமைந்துள்ளது. சாதாரண மக்கள் ரசிக்கும்படியான விதத்தில் கதையமைக்கப்படவில்லை என்ற குறையிருந்தாலும், 15600 அடி நீளத்திலும் ஒரு அடிகூட அனுவசியமாகவோ, 'போர'டிப்பதாகவோ அமையாமல் விறுவிறுப்போடு செல்வது டைரக்டர்களின் திறமையையே வெளிப்படுத்துகின்றது.

## நட்புறவு ஆரம்பம்

சாதாரணமாகப் படங்களின் இறுதியில் 'முடிவு' என்றுதான் போடுவார்கள். ஆனால் இந்தப் படத்தில் 'ஆரம்பம்' என்ற சொல்லோடு படம் முடிவடைகிறது. அபிநாசி நிகிதினின் இந்திய விஜயத்திலிருந்து இந்திய-சோவியத் நட்புறவு ஆரம்பமாகிறது என்ற கருத்தில் போட்டிருக்கும் அவர்களது கற்பனைத் திறன் பாராட்டத்தக்கதாகும்.

தேசங்களிடையே நட்புறவு வாழ்வை மையமாகக் கொண்டு தயாரிக்கப்பட்டிருக்கும் இந்தப் படத்தை ஒவ்வொருவரும் அவசியம் பார்த்து ரசிக்க வேண்டும்.

— மின்னல்

# பஞ்சாலைத் தொழிலாளருக்கு மாதம் ரூ. 220 கொடு!

## பஞ்சாலைத் தொழிலாளர் சம்பள போர்டிடம் டாங்கே வலியுறுத்தல்

புதுடில்லி, ஏப். 5—

பஞ்சாலைத் தொழிலாளர்களுக்குச் சம்பளம் பஞ்சப்படி இரண்டும் சேர்ந்த ஊதியம் மாதத்திற்கு ரூ 220 ஆக நிர்ணயம் செய்யும்படி பஞ்சாலைத் தொழில் மத்திய சம்பள நிர்ணய போர்டிடம் அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் பொதுச்செயலாளர் எஸ். ஏ. டாங்கே வலியுறுத்திஞர்.

1957-ல் நடைபெற்ற முக்கூட்டு மாநாட்டில் பஞ்சாலை முதலாளிகளே சுமார் ரூ. 150 ஊதியம் கொடுப்பது சரி என்பதை ஒப்புக்கொண்டிருக்கிருர்கள் என்பதை அவர் சுட்டிக் காட்டிஞர்.

பஞ்சப்படி பல்வேறு நகரங்களில் பல்வேறு மாதிரியாக இருக்கின்றன. பம்பாயில் ஒரு பஞ்சாலைத் தொழிலாளி ரூ. 110 பெறுகிருர். கான்பூர் தொழிலாளி ரூ. 100 பெறுகிருர். கோவையில் ரூ. 90 பெறுகிருர்.

இங்கு நடைபெற்று வரும் இந்த மத்திய சம்பளக் குழு இன்னும் நான்கு அல்லது ஐந்து மாதங்களில் தனது அறிக்கையை சமர்ப்பிக்கும் என்று தெரிகிறது.

அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் சார்பில் டாங்கேயுடன் என். கே. கிருஷ்ணன் (கோவை), எஸ். ஜி பாட்கர் (பம்பாய்), பி. டி. ஜோஷி (டெல்லி) முதலிய அ. இ. தொ. ச. காங்கிரஸ் பஞ்சாலைப் பகுதி தலைவர்கள் கலந்து கொண்டனர்.

இந்திய பஞ்சாலைத் தொழில் நிலைபற்றி பேசிய டாங்கே யுத்த காலத்தில் ஆலை அதிபர்கள் கொழுத்த லாபம் சம்பாதித்திருக்கிருர்கள் என்றும் தொழிலாளருக்கு அதிக ஊதியம் கொடுக்கும் சக்தி இத் தொழிலுக்கு இருக்கிறது என்றும் வாதித்தார்.

1939-ம் ஆண்டை அடிப்படையாகக் கொண்டால், 1955-ல் இத் தொழிலின் லாபப் புள்ளி 535 ஆக (கிட்டத்தட்ட ஆறு மடங்காக) உயர்ந்திருப்பதைக் குறிப்பிட்டார்.

சில மில்கள் மூடப்படுகின்றன. என்ருல் அதற்குக் காரணம் தொழிலில் நஷ்டமல்ல, ஆனால் நிர்வாக ஊழல்களே காரணம் என்று அவர் கூறுகிருர். ஷோலாப்பூர், ராஜஸ்தான், ஜலகான் மில்கள் மூடப்பட்டது பங்குகாரர்களுக்குள் ஏற்பட்ட பூசல்களின் விளைவே என்ருர்.

பஞ்சாலைகளில் பெண் தொழிலாளர்கள் விலக்கப்படுவதை ஆட்சேபித்தும், மொத்தத்தில் 25 சத விகிதம் பெண்களுக்கு வேலை அளிக்கவேண்டும் என்றும் டாங்கே வலியுறுத்திஞர்.

இந்த சம்பள நிர்ணயக் குழுவில் சுயேச்சையினராக அசோக் மேத்தா, பேராசிரியர் மத்தூர் இருவர், தொழிலதிபர்கள் சார்பில் அரவிந்த் மபெட் லால், ஸ்ரீ பரத் ராம் இருவர், தொழிலாளர் சார்பில் வாசவாதா, ஜி. ராமானுஜம் இருவர் பிரதிநிதிகளாக உள்ளனர்.

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, Madras-1
Editor: P. JEEVANANDAM